# வயிரவன் கோயில் மகிமை

(நகர வயிரவன்பட்டி)

சேந்தன்குடி வி. நடேச கவிராயர் இயற்றிய
**வயிரவன் கோயிற் புராணத்தின்
உரைநடைச் சுருக்கம்**

உரைநடை ஆசிரியர் :
திருவண்ணாமலை ஆதீனப் புலவர்
**பண்டித வித்வான் முத்துவேங்கடாசலம்**

பதிப்பாசிரியர் :
**நா.வெ. நாராயணன், M.A., B.T.**
சிதம்பரம் இராமசாமி செட்டியார் மேல்நிலைப் பள்ளியின்
முன்னாள் தலைமை ஆசிரியர்.



வெளியீடு :
**வயிரவன் கோயில் நாட்டுக்கோட்டை
நகரத்தார் சங்கம், நகர வயிரவன்பட்டி - 630215**

இரண்டாம் பதிப்பு : ஆகஸ்ட், 1996
பதிப்புரிமை
விலை : ரூ. 5-00

# பொருளடக்கம்



அச்சும் அமைப்பும் :
பதிப்புச்செம்மல் டாக்டர் ச. மெய்யப்பன்




உ

சிவமயம்

# வயிரவர் அடியார் பெறும் நன்மைகள்

மன்னுலகம் போற்றும் வயிரவன் மாணடியை
உன்னும் அடியார் உவகையுடன்-பொன்னும்
பொருளும் மிகப்பெற்றுப் பூதலத்தில் வாழ்வார்
அருளும் அடைந்துநலம் ஆர்ந்து.

- திருமுருக கிருபானந்தவாரியார்

# வயிரவன்பட்டித் தலச்சிறப்பு

1. மகப்பெறும் பேறுவேண்டின் மாநிதி கிடைத்தல் வேண்டின்
மிகுத்ததோர் கல்வி வேண்டின் மேதினி புரத்தல் வேண்டின்
பகைத்திறம் வேறல்வேண்டின் படர்புகழ் வயிரவப்பேர்
நகைத்தலைத் தெரியல் பூண்டோன் நகருழிச் சார்தல் வேண்டும்

2. வயிரவ நகரந் தன்னை மனம் கொள்வோன் தருமம் சாரும்
வயிரவ நகரம் என்று வழுத்தினோன் அருத்தம் எய்தும்
வயிரவ நகரம் கண்டு வணங்கினோன் இன்பம் துன்றும்
வயிரவ நகரில் என்றும் வதிந்தவன் வீடு மேவும்.

வயிரவன் கோயிற் புராணம்.

# 1. முதற்பதிப்பின் முன்னுரை

## வயிரவன் கோயில் புராணம்

வடிவுடை அம்பாள் சமேத வளரொளிநாதர் பெருமையையும், வயிரவ சுவாமிகளின் சிறப்பையும் பெரிதும் கூறுவது வயிரவன் கோயிற் புராணம் என்ற செய்யுள் நூலாகும். 19-ம் நூற்றாண்டின் இறுதியில் வெளியிடப்பட்ட இந்த நூல் சேந்தன்குடி வி. நடராசக் கவிராயரால் இயற்றப்பட்டதாகும். இந்நூல் தேவகோட்டை வித்வ சிகாமணி, மேன்மைசால் வீர.லெ. சிந்நயச் செட்டியார் அவர்களால் குறைகள் களைந்து புதுக்கப் பெற்றுத் திருத்தமாக வெளியிடப்பட்டது. கவிச்சிம்புள் எனவும், கல்விச் சிங்கம் எனவும் கீர்த்தி பெற்ற திரு. வீர.லெ.சிந்நயச் செட்டியார் அவர்கள், தமிழ்ச்சங்கம் கண்ட பாண்டித்துரைத் தேவரின் இனிய நண்பர் ஆவார். திரிசிரபுரம் மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்களாலும், சிவத்திரு சொக்கலிங்க ஐயா அவர்களாலும், மகா மகோபாத்தியாய உ.வே.சாமிநாதையர் அவர்களாலும், பெரிதும் மதிக்கப்பட்ட இவர்கள் நகரத்தார் வரலாறு பற்றிய ஆராய்ச்சி செய்து நூல் வெளியிட்டுள்ளார். அன்னாருடைய புலமைத் திறனும், ஆராய்ச்சி வன்மையும், சிவானந்த ஈடுபாடும் பக்திச்சுவை சொட்டும் கவிநயமும் இப்புராணத்தில் விரவிக் காணப்படுகின்றன. வயிரவன் கோயிலுக்கு ஒரு சிறந்த தலபுராணத்தை வெளியிட்டமைக்குச் சிவநேசச் செல்வர்களும், தமிழ் அன்பர்களும் திரு. சிந்நயச் செட்டியார் அவர்களுக்குப் பெரிதும் கடமைப்பட்டுள்ளார்கள். அன்னாருடைய பொன்னார் திருவடிகளைப் போற்றி வணங்குகிறேன்.

இப்புராணத்தில் திருமுறைத் தலங்களின் திருப்பணிகள் பல செய்த நகரத்தார் சமூகத்தினரின் பண்டைய வரலாறும், திருப்பணிகளின் சிறப்பும் கூறப்படுகிறது. மக்கள் நல்வாழ்வு பெறுவதற்கு இறையருள் அவசியம் என்பதையும் இடுக்கண் களைவதற்கும், ஆணவத்தை அகற்றுவதற்கும், இறை வழிபாடு அவசியம் என்பதையும், உணர்ந்து வருந்தி இறைவனை வழிபட்டால் பாவங்களை இறைவன் மன்னிப்பார் என்பதையும் வயிரவன் கோயில் புராணம் வலியுறுத்துகிறது.

பாயிரத்திலுள்ள இறைவணக்கப் பாடல்களும் இந்திரன், ததீசி முனிவர், சுக்கிரன், தேவர்கள் முதலியோர் வளரொளிநாதரையும், வயிரவமூர்த்தியையும், கற்பக விநாயகரையும் துதிக்கும் பாடல்களும் உள்ளத்தை உருக்குபவை. இப்புராணத்தை எளிய உரை நடையில் சுருக்கி ஆக்கித்தருமாறு திருவண்ணாமலை ஆதினப் புலவர், பண்டித வித்வான் மு. முத்துவேங்கடாசலம் அவர்களை வேண்டிக் கொண்டேன். அவர்களும் தம் முதிர்ந்த வயதிலும் இப்பணியைச் செவ்வனே செய்து அதை வெளியிடுவதில் யுக்தானுசாரமாகக் கூட்டியோ, குறைத்தோ செய்து கொள்வதற்கு அன்புடன் எனக்கு அனுமதி அளித்தார்கள். அவர்கள் பண்டிதமணி மு.கதிரேசன் செட்டியார் அவர்களின் நெருங்கிய நண்பரும் ஆவார்கள். அன்னாருக்கு அருள்மிகு மார்த்தாண்ட வைரவர் அருளால் 19.3.95 அன்று காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ ஜெயேந்திர சரஸ்வதி சுவாமிகள் புதுக்கோட்டை முகாமில் அவருடைய ஞான தானப் பணியைப் பாராட்டிப் பொன்னாடை அணிவித்துச் சிறப்பித்துள்ளார்கள்.

வயிரவன் கோயிற் புராணம் மொத்தம் 17 படலங்களைக் கொண்டதாகும். மொத்தம் 1152 செய்யுட்கள் உள்ளன. அவற்றுள் நாட்டுப் படலம், நகரப் படலம், நைமிசப் படலம், புராண வரலாற்றுப் படலம், தலவிசேடப் படலம், தீர்த்த விசேடப் படலம் ஆகியவற்றைத் தவிர்த்தும், பாயிரத்தைச் செய்யுள் வடிவத்திலேயே கொடுத்தும், எஞ்சிய பத்துப் படலங்களுக்கு எளிய உரைநடைச் சுருக்கம் தரப்பட்டுள்ளது.

வயிவரன் கோவில் தலம் கீழ்க் கண்ட பெயர்களில் இப்புராணத்தில் குறிக்கப்படுகிறது: - வடுகநாதபுரி, வடுகநாதபுரம், வடுகன் மூதூர், வயிரவ நகர், வயிரவ மாபுரம்.

அரக்கர்களால் ஏற்பட்ட துன்பத்தினின்று மீள்வதற்காகத் தேவர்கள் வளரொளிநாதரிடம் அடைக்கலம் புகுந்தனர். அவர்களைக் காப்பாற்ற இறைவன் வயிரவக் கோலம் பூண்டார். கற்பக விநாயகர் தலைமையில் அரக்கர்களை சம்ஹாரம் செய்து இறுதியில் வயிரவமூர்த்தி அரக்கர் தலைவனை அழித்துத் தேவர்களைக் காப்பாற்றினார். இந்திரன், ததீசிமுனிவர், சந்திரன், சுக்கிரன் முதலியோர் இத்தலத்தில் பூசனை செய்து பாவம் நீங்கினர். புராண நிறைவில் கிரிகரப் படலத்தில் நகரத்தார் வரலாறும், ஒன்பது நகரக் கோயில்கள் ஏற்பட்ட விவரமும் கூறப்படுகிறது. மேலும் இளையாற்றங்குடி, பிள்ளையார்பட்டி ஆகிய தலங்களின் பெருமையும் கூறப்படுகிறது.

சிவபுராணத்தைத் கேட்பதாலும், படிப்பதாலும், உயிர்கள் சிவகதி அடையும் என்று ஆன்றோர்கள் கூறுகிறார்கள்.

''திருத்தகு சிவபுராண சிரவண விசேடத்தாலே
உருத்தகு பாவம் நீங்கும் புண்ணியம் ஒருங்குமேவும்
மருத்தகு பத்தி வாய்க்கும் மாதேவன் அருள் உண்டாகும்
கருத்தகு தீமையெல்லாம் கழன்று மேற்கதி உண்டாமால்''

– காசி ரகசியம்

எனவே எல்லோரும் இப்பயன்களை அடைய வேண்டும் என்ற கருத்தில் இந்நூலை வெளியிடுகின்றேன்.

## வயிரவன்பட்டித் தலச் சிறப்பு

நகர வயிரவன்பட்டித் தலம் காரைக்குடி - திருப்பத்தூர் நெடுஞ்சாலையில் பிள்ளையார்பட்டியை அடுத்து அழகிய இயற்கைச் சூழலில் அமைந்துள்ளது. சோழ அரசனால் ஏற்பட்ட இடையூறுகள் காரணமாகச் சோழ நாட்டிலிருந்து தென்பாண்டி நாட்டிற்கு வந்த நகரத்தார் சமூகத்தினருக்கு கி.பி. 718-ல் ஒன்பது நகரக்கோயில்கள் ஏற்பட்டன. இவ்வொன்பது சிவாலயங்களுள் வடிவுடையம்மை உடனாய வளரொளிநாதர் திருக்கோயிலும் ஒன்றாகும்.

''விரித்த பல் கதிர்கொள் சூலம் வெடிபடு தமருகங்கை
தரித்ததோர் கோலகால பைரவனாகி வேழம்
உரித்து உமை அஞ்சக்கண்டு ஒண்டிரு மணிவாய் விள்ளச்
சிரித்தருள் செய்தார் சேறைச் செந்நெறிச் செல்வனாரே''

என்று அப்பர் சுவாமிகள் போற்றிய வயிரவநாதர் இத்தலத்தில் சிறப்பாக விளங்குகிறார்.

''நஞ்சினை உண்டிருள் கண்டர் பண்டு அந்தகனைச் செற்ற
வெஞ்சின மூவிலைச் சூலத்தர் வீழி மிழலையார்
அஞ்சனக் கண்ணுமை பங்கினர் கங்கையங்காடிய
மஞ்சனச் செஞ்சடையார் என வல்வினை மாயுமே.''

என்னும் சம்பந்தர் பாடல் வயிரவரைக் குறிப்பிடுவதாகக் கூறப்படுகிறது.

வயிரவர் சிவ மூர்த்தங்களுள் ஒருவராகக் கருதப்படுகிறார். க்ஷேத்திரங்களைக் காக்கின்றமையால் க்ஷேத்திரபாலகர் எனவும் அழைக்கப்படுகிறார். நான்மறைகளே நாய் வடிவுடன் வயிரவருக்கு வாகனமாக விளங்குகின்றன. பிரம்மனின் அகந்தையை வயிரவர் அடக்கினார் என்பது கந்த புராணம்.

திருப்பத்தூரில் உள்ள பைரவர்கோயில் வைரவருக்குச் சிரசுஸ்தானமாகவும், வயிரவன்பட்டியில் உள்ள வயிரவர் கோயில் இதயஸ்தானமாகவும், இலுப்பைக்குடியிலுள்ள வைரவர்கோயில் பாதஸ்தானமாகவும் விளங்குகின்றன.

வயிரவன்பட்டியில் ஆண்டுதோறும் கார்த்திகை மாதம் சஷ்டியன்று சம்பாசஷ்டி விழா சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது. அன்று வயிரவமூர்த்தி அரக்கனை சம்ஹாரம் செய்கிறார். சம்ஹார சஷ்டி விழா என்பது தற்சமயம் சம்பாசஷ்டி விழா என்று அழைக்கப்படுகிறது.

## சிற்பங்களின் சிறப்பு :

வயிரவன் கோயிலில் காணப்படும் சிற்பங்கள் நகரத்தார்களின் தெய்வத் திருப்பணிகளின் மகுடமாகத் திகழ்கின்றன. இக்கோவிலின் கருங்கல் திருப்பணி கி.பி. 1864-ம் ஆண்டில் நகரத்தார்களால் துவங்கப்பட்டு கி.பி. 1894-ம் ஆண்டு சிறந்த சிற்ப வேலைப்பாடுகளுடன் நிறைவேறியது. நாற்பது ஆண்டுகாலம் வயிரவன்பட்டியிலேயே தங்கி இருந்து வயிரவன் கோயிலைச் சிறப்பாகக் கட்டி முடிப்பதற்கு உறுதுணையாக இருந்த பெருமை தெய்வநாயக வகுப்பைச் சேர்ந்த கண்டனூர் அ.நா. குடும்பத்தினரான திரு. நா.அ.ராம. இராமசாமி செட்டியார் அவர்களைச் சாரும்.

சண்டீசுவரர் எழுந்தருளியுள்ள தனிக்கோயில் ஒரே கல்லினால் ஆனது. சுமார் 20 டன் எடையுள்ள கல்லை குன்றக்குடி - திருப்பத்தூர் நெடுஞ்சாலைக்குத் தெற்கேயுள்ள மலையிலிருந்து ஒரே கல்லாக வெட்டி எடுத்து வந்து குடைந்து அதில் சண்டீசுவரரை எழுந்தருளச் செய்திருக்கிறார்கள். அந்தக்கல் எடுக்கப்பட்ட இடத்தில் ஏற்பட்ட பள்ளத்திற்குச் சண்டீஸ்வரர் மலைப்பள்ளம் என்று பெயர்.

சண்டீஸ்வரர் சந்நிதிக்குக் கீழ்ப்புறம் வளரொளிநாதரின் திருமாளிகை வடக்குச் சுவரில் ராமபிரான் ஆஞ்சநேயருக்கு முன்பாகக் கைகூப்பி நிற்கும் கோலத்தில் காணப்படுகிறார். இது ஒரு அரிய அழகிய சிற்பம்.

நடராசர் சன்னிதியில் காணப்படும் இரண்டு குதிரை வீரர் சிற்பங்கள் அற்புதமானவை. குதிரை வீரர் சிற்பத்துக்கு வடக்கில் கண்ணப்பர் சிற்பம் கண்கொள்ளாக் காட்சியாகும்.

வயிரவர் சிற்பம் வனப்பு மிக்கதாகும். வயிரவர் பத்மபீடத்தில் நின்ற திருக்கோலத்தில் காணப்படுகிறார். அக்கினி கேசத் தலைக்கோலமும், ஆபரணங்கள் நிறைந்த மார்பும் காணப்படுகின்றன. நான்கு கரங்களில் உடுக்கை, பாம்பு, சூலம் கபாலம் ஆகியவற்றை ஏந்தியுள்ளார். வயிரவருக்குப் பின்புறம் அவரது வாகனமான நாய் நின்ற நிலையில் காணப்படுகிறது.

வயிரவன் கோயில் விமானங்களிலும், மண்டப விமானங்களிலும், மொத்தம் 1416 சுதைச் சிற்பங்கள் உள்ளன. இவை மிகுந்த கலை அழகு உடையவை.

வயிரவன் கோயிலில் உள்ள முதல் திருச்சுற்றில் வடகிழக்குக் கூரையில் வயிரவன் கோயில் தலபுராணத் தொடர்பான ஓவியங்கள் காணப்படுகின்றன. தென்கிழக்குக் கூரையில் இராமாயணக் காட்சிகள் ஓவியங்களாகத் தீட்டப்பட்டுள்ளன. இவை மிகுந்த கலை நுணுக்கம் கொண்டவை.

வயிரவன் கோயிலின் சிற்பங்களைப் பற்றியும் ஓவியங்களைப் பற்றியும் விவரமாகத் தெரிந்து கொள்ள விரும்புபவர்கள் டாக்டர் வ. தேனப்பன் அவர்கள் மிக நுணுக்கமாக ஆராய்ச்சி செய்து வெளியிட்டிருக்கும் 'ஒன்பது நகரக்கோயில்கள்' என்ற நூலைப் படிக்க வேண்டுகிறேன். (தேவகோட்டை தேன்வள்ளியம்மை பதிப்பக வெளியீடு)

நகரவயிரவன்பட்டியின் தலச்சிறப்பை அனைவரும் அறிந்துகொள்ள வேண்டும் என்ற ஆர்வத்தின் காரணமாக இச்சிறு நூலை வெளியிடுகிறேன். முன்னுரையில் வயிரவன் கோயிலைப் பற்றிய சிறப்பை நான் எழுதுவதற்குப் பெரிதும் எனக்குத் துணைபுரிந்தவை 1982-ம் ஆண்டு நகர வயிரவன் கோயில் திருக்குட நன்னீராட்டு விழாச் சிறப்பு மலரில் வெளி வந்த டாக்டர் சுப. அண்ணாமலை அவர்களின் கட்டுரையும், ராயவரம் உயர்திரு. ப.வ. ராம. குழந்தையன் செட்டியார் அவர்களின் கட்டுரையும், டாக்டர். வ. தேனப்பன் அவர்கள் எழுதிய சிறந்த ஆராய்ச்சி நுலான 'ஒன்பது நகரக் கோயில்கள்' என்ற நூலும் ஆகும். மேற்கண்ட பெரியோர்களுக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

எனது இந்தச் சிறிய நூல் வெளியீட்டுப் பணியில் என்னை ஊக்குவிக்குமாறு வயிரவ நாதரின் பக்தகோடிப் பெரு மக்களையும், தமிழன்பர்களையும், பணிவுடன் வேண்டுகிறேன்.

காரைக்குடி, நா. வெ. நாராயணன்
27.3.95 பதிப்பாசிரியர்

உ

சிவமயம்

# 2. பாயிரம்

## விநாயகர் காப்பு

சீர்பெற்று ஓங்கும் சிவசத்தி குஞ்சரப்
பேர்பெற்று ஈன்ற பெரும்பெயர்ப் பிள்ளையை
நார்பெற்று உள்ள நளினத் திருவினர்
பார்பெற்று எய்துவர் பல்வகைச் செல்வமும்.

## வாழ்த்து

அந்தணர் வானத்து உள்ளார் ஆனினம் செழித்து வாழ்க!
கொந்தணி முகில்வழாது குளிர்மழை பொழிக! கோமான்
செந்தனிக் கோல்படர்ந்து திசையெலாம் காக்க! வையம்
சந்ததம் ஆர்க! இன்பம்; சைவசித்தாந்தம் வெல்க!

## பயன்

வயிரவன் கோயில் தலபுராணத்தை மல்கிய விருப்பொடு கேட்போர்
அயிர்அவண் மண்டு கரைபொரு தரங்கத்து ஆழிசூழ் அவனிமேல் நூறாண்டு
உயிரவர் ஆகிப் பிணி ஒரீ இச் செல்வத்து ஓங்குபு நன்மகார்ப் பெற்றுக்
கயிரவ மலர்வாய்க் கௌரியோர் பாகன் கழல்நிழல் முடிவினிற் கலப்பார்.

## வளரொளிநாதர் துதி

சீர்மலியும் பொருள்மலியும் சிற்பரனார் அருள்மலியும்
வார்மலியும் தனத்தாயாம் வடிவுடையாள் ஒருபாகன்
கார்மலியும் கண்டத்து எம்கண்ணுதலான் வளரொளிப்பேர்த்
தார்மலியும் பரசிவன்தாள் தலைமலிய வணங்கிடுவாம்.

## வடிவுடையம்மை

எழு தாமரையின் மின்னாரும் எழுதா மறையும் இனிதுஏத்தித்
தொழு தாய் அனந்த உயிரகத்தும் தூய்தாய் அரிய மந்தணமாய்
முழுதாய் மனுவாய் மூதுலகாய் முதிரும் சுவைப்பால் கரந்து உறையும்
இழுதாய் எவையுங் கலந்த வடிவுடையாள் இணைத்தாள்
இறைஞ்சிடுவாம்.

## நடேசர்

பெண்ணொடு ஆண்அலி என்றுஓதும் பிரபஞ்சத்து உயிர்கள் உய்வான்
தெண்நில மதிமுகத்துச் சிவகாமவல்லி காண
அண்ணும் ஐந்தொழில் பயக்கும் ஆனந்த நடம் செய்கின்ற
புண்ணியன் குஞ்சிதச் செம்பொன்னடி போற்றி வாழ்தும்.

## தட்சிணாமூர்த்தி

காரணமாகி அனைத்து உலகினுக்கும் களைகணாய் ஆதியோடு அந்தம்
நாரணன் பிரமன் இன்னமும் துருவி நண்ணரும் நுண்ணிய பொருளாய்ச்
சீர் அணவுறுமா நால்வரைச் செய்த தேசிக சிகாமணிஆகி
ஆரணம் பழிச்சும் ஆல்நிழல் அமர்ந்த அடிகளை அகத்திடை அமைப்பாம்.

## விநாயகர்

பணிகொள் பாயும் பாட்டு அளிசேர் பதுமஆதனமும் புட்பகமும்
திணிகொள் ஐராவதக் களிறும் சிறந்த கயிலைப்பெரு வாழ்வும்
தணிகொள் சென்னித் திருத்தொண்டர் தமக்கு நல்கும் ஐங்கரத்தான்
அணிகொள் செய்ய துணைப்பாதத்து அன்பு புரிவாம் அனவரதம்.

## சிதம்பர விநாயகர்

கதம்பெறு கயமுகக் கயவற் காய்ந்து முன்
இதம்புரிந்து உயிர்க்கெலாம் இடுக்கண் நீக்குபு
விதம்படு சீர்த்தியால் உலகை வேய்ந்துள
சிதம்பர விநாயகத் தேவைப் போற்றுவாம்.

## வயிரவர்

படைக்கும் பரிசும் படியளிக்கும் பண்பும் பதுமப் பண்ணவற்கும்
தொடைப் பைந்துளவத் திருமாற்கும் சுதந்தரத்த தொழில் அன்மை
முடைப்புன்தலை வெண்கலன் கரிய முழுக்கஞ்சுகம் என்று
இவ்வுணர்த்த
மடைத்தண்புனல் போல் அருள்வழங்கும் வடுகநாதன்
வழித்துணையே.

## சுப்பிரமணியர்

புள்ளிப்பிணை மேல்நாள் பயந்த பொன்அம் கொம்பர் அன்னாளை
வள்ளிப் பொருப்பில் வாழ்மயிலை வடிவு முதிர்ந்த கௌமாரம்
தள்ளிக்கிழ மாதவனாகித் தனித்துப்புணர்ந்த இளஞ்சேயின்
கள்ளிற் பொலியும் கடிகமழ் பூங்கமல மலர்த்தாள் கைதொழுவாம்.

## திருநந்திதேவர்

அறிவரும் காமிகாதி ஆகமப்பேர் ஆர்கலிக்கு அளவுகோலாகிச்
செறிவினால் பவஞ்சம் முழுவதும் சுத்த சிவ பரஞ்சுடரெனத் தெளிந்து
நெறிகெழு சனற் குமாரனுக்கு உண்மை நிலையினை மலைவற
நிகழ்த்திப்
பிறிவிலன் இன்பவெள்ளத்துள் திளைக்கும் பெருந்தகை நந்திதாள்
பெட்பாம்.

## திருஞானசம்பந்தர்

எண்நிறைந்த பல்வேதத்து இயன்றுள்ள பொருள் ஒருங்கே
பண் நிறைந்த பதிகத்தில் அமைத்திசைத்துப் பண்டு என்பு
பெண்நிறைந்த உருஎய்திப் பிழைத்து எழுமா கடைக்கணித்துக்
கண்நிறைந்த நுதற்பதியைக் கலந்தபிரான் கழல் போற்றி.

## திருநாவுக்கரசர்

திருநீறும் ஐந்தெழுத்தும் கண்டிகையும் மெய்ப்பொருளாம் திறம் தெரிப்பான்
பெருநீறு நிறை அறைபுக்கு ஒருதீங்கும்இன்றி எழீஇப் பிறவித் துன்பக்
கருநீறு படப்புரிந்து பகல்ஊரும் புகலூரில் கடவுளோர்மெய்
வருநீறு புனைபெருமான் தனைவிரவு நாவரசின் மலர்த்தாள் போற்றி.

## தம்பிரான் தோழர்

உருவெண்ணெய் உவாமதியம் ஒளிர் படிகம் எனக்கொண்ட உலகநாதன்
திருவெண்ணெய் நல்லூரில் வலிந்தாளும் அரும்பேறு சிறக்கப் பெற்றுத்
தரு அண்ணல் சதுர்முகன் மால் தாழ்ந்திறைஞ்சக் கைலைக்குத்
தந்திமேற் செல்
பெரு அண்ணல் சுந்தரனை அந்தரமின்று எஞ்ஞான்றும் பேணி
வாழ்வாம்.

## திருவாதவூரர்

அனற்படு பூதிசாதனம் எழுத்தைந்து ஆகமம் என்னும் நால் அங்கத்து
இனப்புலப் பகைஞர் ஐவரை வென்று ஆங்கு இனியபேரின்ப நாடெய்தி
மனத்திடை வெகுளி மாறுறா மாறன் மாறு கொண்டு ஓச்ச எம்மானை
வனச்சடை முடிமேல் மண் சுமப்பித்த மன்னனை வைகலும் துதிப்பாம்.

## சண்டேசர்

சும்மை வான் புகழ்ச் சேய்ஞலூர் உதித்து மண்ணிநதிச் சூழல் ஓர்சார்
செம்மைசேர் செழுமறையோர் திருந்துமனைக் கோதனம்பெய் தீம்பால்
கொண்டே
எம்மையாள் இறைவழிபாடு இயற்றுமிடை வெகுண்டெழுந்த
ஈன்றோற் செற்ற
அம்மையான் அடிச்சண்டிப் பெருமானுக்கு அடியார்கட்கு அடிமை
பூண்டு.
(பூண்டு = பூண்டேன்)

## அறுபத்து மூவர்

ஈசன் அடிமைத்திறன் இற்று என்று எவரும் தெளிய உணர்பாக்கு
மாசிலாத ஒரோ விரத வாய்மை நாளும் கடைப்பிடித்துப்
பாசம் ஒருவித் தமசீர்த்தி பாரில் பரப்பூஉப் பரகதிசேர்
ஆசில் அறுபான் முத்தொண்டர் அம்பொற்பாதத்து அன்புறுவாம்.

## சேக்கிழார்

பக்தி ஞானம் மெய்த்தவம் ஓர் படிவம் கொண்டு வந்தாங்குத்
தொத்தின் நீடு பசிய பொழில் சுலவும் குன்றத்தூர் உதித்து
முத்தி மேய திருத்தொண்டர் முதிர்சீர் முழுதும் விரித்துரைத்த
தித்தியா நின்று உருக்குமொழிச் சேக்கிழார் தாள் சிரம் புனைவாம்.

## பட்டினத்தார்

வலம்புரிகள் கிடந்துஅலறி வயிறு உளைந்துமணிஈனும் வாரிசூழ்ந்த
நிலம்புரியு நெடுநோன்பு பலிப்ப எழிற் பூம்புகார் நிலவச் சான்றோர்
குலம்புரிய வணிகர்குலத்து அவதரித்துப் பெருநிதியக்குப்பை நீத்த
வலம்புரிய புகழ்ச்சைவ சிகாமணி பட்டினத்தடிகள் அடிகள் போற்றி.

## செந்தமிழ்ப் பரமாசாரியர்

தேவ தேவனார் திருஉளக் குறிப்பினுக்கு இசைந்து
பாவகற்பொரு மணிகிளர் பனிவரை ஒருவிப்
பூவர் சந்தனம் செந்தமிழ் மணங்கமழ் பொதியில்
மேவு அகத்திய முனிவனை வெஃகுதல் அஃகாம்.

## நாமகள்

தளர்ந்துழி உதவி அழிவுறாக் கல்வித் தனத்தினை ஏற்றவர்க்கு ஈந்தே
இளங்களி அளிசூழ் தவள முண்டகத்தில் இனிது வீற்றிருப்பது போல்
அளந்தறியாத ஆன்ம கோடியின்நா அகந்தொறும் அமர்ந்து
நான்முகற்குத்
துளங்கல்இல் சுகம்செய் சுந்தரி பாதத் துணைமலர் துணைமலர் தருமே.

பாயிரம் நிறைவு

## 3. மூர்த்தியின் சிறப்பு

தென்பாண்டி நாட்டில் வயிரவன் கோயில் அமைந்துள்ள தலத்தின் பெயர் வடுகநாதபுரம். இதை வீரபாண்டியபுரம் என்றும் வயிரவன்பட்டி என்றும் கூறுவர். இத்திருக் கோவிலின் தலவிருட்சம் அழிஞ்சில் மரமாகும். கார்த்திகை ஞாயிற்றுக்கிழமை ஒரு நாழிகை அங்குத் தங்கினும் பாவமனைத்தும் கரைந்தொழியும். இத்தலத்திற்கு 'அங்கோலவனம்' என்ற பெயரும் உண்டு. இத்தலத்தின் தீர்த்தத்தின் பெயர் 'வடுகதீர்த்தம்'. பங்குனிமாத பௌர்ணமியில் இதில் நீராடினோர் சிவபதவி பெறுவர். சித்திரைத் திங்கள் சித்திரை நட்சத்திரத்தில் நீராடினோர் மகப்பேறு பெறுவர்.

இத்தலத்தின் இறைவனின் பெயர் வளரொளிநாதர். அம்பிகையின் பெயர் வடிவுடையம்மை. வளரொளிநாதரின் இலிங்கம் ஒளியே திருமேனியாய்ப் பழமும் சுவையும் எனப் பரந்து அழிஞ்சில் மரத்தடியில் இந்திரன் முதலியோர் வணங்க வீறுடன் விளங்கும். மாசுபடிந்த உடலுடன் அல்லற்படும் மக்கள் வளரொளிநாதர் திருநாமம் கூறிக் கசிந்து துதித்தால் மாசு நீங்கி ஒளிபெறுவர்.

பிரமனும், திருமாலும், இந்திரனும் அறிவு மயங்கி, 'சிவமே பரம்பொருள்!' எனும் உண்மை மறந்து அகந்தை கொண்டனர். உயிர்க்கு உயிராய் இருந்து இறைவன் செயலாற்றுவதை மறந்தனர். 'தாமே பரம்பொருள்' என்ற பித்தேறித் தமக்குள் போரிடத் தொடங்கினர். அப்பொழுது சிவ பரம்பொருள் ஒளிப்பிழம்பாகத் தோன்றியது. எண்ணற்ற அண்டங்களில் நிறைந்த பிரகாசங்கள் ஒன்று சேர்ந்த இலிங்க வடிவைப் பிரமன் முதலியோர் கண்டனர். ஒரே காலத்தில் கோடி கதிரவர் உதித்தாற் போன்ற இப்பேரொளியைக் கண்டு இவர்கள் தம் செருக்கொழிந்து நின்றனர்.

அப்பொழுதில் ஆகாசவாணி, "உமக்குப் பதவி வழங்கி அண்டத்தின் அகத்தும் புறத்தும் பரவிய பழம் பொருள் இவனே. பஞ்சபூதங்கள், ஐம்பொறிகள், ஐம்புலன்கள், உட்கரணங்கள் இவற்றின் சேட்டைகள் அற்ற மாதவத்தோர் காணும் பேரொளிப் பொருள் இவனே!" என்று கூறிற்று. இதுகேட்ட அயன் முதலிய தேவர்கள் களிப்புற்றுப் பின்வருமாறு துதிக்கலாயினர் :-

சொற்பதம் கடந்த ஞான சொரூபமே எளியரேம் செய்
முற்பவம் தபமுளைத்த முதுவளரொளியே! மிக்க
அற்புதம் எவற்றினுக்கும் அற்புதம் ஆகியுள்ளாய்
பொற்புறு புராதனக்கான் புரந்தருள் புனித! போற்றி (1)

வாரணத்து உரிவை போர்த்த வளரொளி நாத! எம்முள்
ஆரணம் கற்று வல்ல அயன் உருவாகித் தந்தும்!
நாரணன் உருவாய்க் காத்தும் நம்பனது உருவாய்ச் சீத்தும்
காரணம் எவைக்கும் ஆன கடவுளே! போற்றி! போற்றி! (2)

எண்குணத்து இறைவ போற்றி! இளம்பிறை சூடிபோற்றி!
பண்கனி வேதச் சென்னி பாலில் நெய் போல்வாய் போற்றி!
தண்குல ஆகமத்தில் தயிர் இழுது அனையாய் போற்றி!
ஒண்கனல் கரியதுஎன்ன ஓங்குஒளிப் பிழம்பே போற்றி! (3)

நிலத்திடை ஐந்தாய் நின்ற நிராமய மூர்த்தி போற்றி!
சலத்தினில் நான்காய் வெய்ய தழல்வயின் மூன்றாய் வங்கூழ்
வலத்து இரண்டாகி ஒன்றாய் வானகத்து அமர்ந்தாய் போற்றி!
மலப்பிணி எமக்கு வீட்டும் வளரொளிநாத போற்றி! (4)

கோதிலா அமுதே போற்றி! குணப்பெருங்குன்றே போற்றி!
ஆதியும் நடுவும் ஈறும் அளக்கிய ஒண்ணாய் போற்றி!
போதொடு புணரி வாழ்வேம் புந்தியில் துறும் அகந்தைத்
தீதுஅற மேக்கு உயர்ந்த திருவளர் ஒளியே போற்றி! (5)

எண்இலாச் சாகைவாய்ந்த இருமறை இன்னும் தேடிக்
கண்ணினால் காண்டல் ஆகாக் கருணை வாரிதியே போற்றி!
விண்ணினோர் பாதாளத்தார் மேதினி மீது மேயார்
உள்நிலாவு உயிருள் மன்னும் உயர்வளர் ஒளியே போற்றி! (6)

தனத்தினால் இறுமாப்பு உற்றுத் தார தம்மியங்கள் சற்றும்
மனத்தினால் தேற்றா மாந்தர் மானயாம் மதி மருண்டு
கனத்தியல் காட்டுகின்ற கண்ட! நின்பிழைத்த எம்மைச்
சினத்திடாது இரங்கி ஆண்டதிருவருள் போற்றி! போற்றி! (7)

எல்லையில்லாத நின்சீர் எள்துணை அறியகில்லேம்
கல்லையோர் வில்லாக் கொண்டு கருதலர் புரம் பொடித்த
வல்லவ! புராண அங்கோல வனத்திடை வளர்ந்தசோதி!
சொல்லரு நின்துரோகம் துடைத்து எமைக் காப்பாய் போற்றி! (8)

இத்துதிகேட்ட வளரொளிநாதர் வடிவுடையம்மையுடன் விடைமேல் தோன்றினார். "நீவிர் துதித்த இப்பாடல்களை ஓதுபவர்கள் வேண்டுவனவற்றை யாம் வழங்குவோம். இனி வருங்காலத்தில் உம் துன்பங்கள் நீங்க நாம் 'மார்த்தாண்ட பைரவன்' திருவுருக் கொள்வோம். இந்த அழிஞ்சிற் காட்டில் எம்மை வழிபட்டு உய்ம்மின்" என்று கூறி இறைவன் மறைந்தருளினார்.

# 4. தேவர் சரண் புகுதல்

காலகண்டன் திருவருள் பெற்ற காசிபமுனிவர் மயக்கும் மாயையைப் புணர்ந்து சூரன், சிங்கமுகன், தாரகன் என்ற மூவரைப் பெற்றார். இவர்கள் தந்தை கூறிய சிவநெறிக்கண் செல்லாது தாய் கூறிய அவநெறியில் செல்லலுற்றனர்.

தன் ஆணைச்சக்கரமே அண்டமெலாம் செலுத்தித் தேவரை நலிவிக்க எண்ணி அரியவேள்வி ஒன்றைச் சூரபன்மன் செய்தான். பல ஆண்டுகள் வேள்வி புரிந்தும் இறைவன் தோன்றாதது கண்டு சூரன் அவ்வேள்வித்தீயில் குதித்தான். ஏனை இருவரும் இறக்க எண்ணிய வேளையில் இறைவன் பிரமசாரிவடிவில் தோன்றிக் கூறலாயினான்:- "தீயில் விழுதலை ஒழிமின்! வேண்டுவன கேண்மின்" என்றவுடன், "எமக்கு அண்ணனே வேண்டும்" என்றனர். இறையருளால் சூரன் எழுந்தான். இறைவன் காட்சி தந்து சூரனை நோக்கி "நின் தவ ஆற்றலுக்கு மகிழ்ந்தோம். விரும்பிய வரம்கேள்," என்றனர்.

அதற்குச் சூரன், "அயன், அரி, இந்திரன், திக்குப் பாலகர் அனைவரும் நான் ஏவும் பணிபுரிதல் வேண்டும். நான் ஆயிரத்து எட்டு அண்டங்களையும் ஒரு சேர ஆளவேண்டும். நினைத்தவாறு எத்திசையும் செல்லும் தேர் வேண்டும்," என்று கேட்டான். கேட்டன அளித்து இறைவன் மறைந்தான்.

மூவரும் ஆசார்யன் சுக்கிரனைச் சென்று வணங்கினர். "சிவன்பால் வரம் பெற்றாய். பேரரசனாம் உன்முன் ஏனையோர் மின்மினியே ஆவர். உன் குலத்தோரை இந்திரன் வாட்டி வதைக்கின்றான். அவனுடன் போரிட்டு நின்னடிப்படுத்தி நீடு வாழ்க!' எனக் கூறிச் சுக்கிரன் விடைகொடுத்தனுப்பினான்.

சூரன் இந்திர ஞாலம் என்ற தேர் மீதேறிப் போருக்கெழுந்தான். தேவர்கள் அனைவரும் கலங்கினர். சூரன் அவர்கள் அனைவரையும் வெற்றி கொண்டான். அவன் வீரமகேந்திரபுரம் என்ற தலைநகரைக் கடலுள் நிறுவினான். தேவர்களை அடிமைகள் ஆக்கினான்.

இந்திராணியின் பேரழகைக் கேள்விப்பட்ட சூரன் காமத்தால் அறிவிழந்து அனலன் என்ற ஒற்றனை அழைத்து, கனற்கண்ணன், தேவகண்டகன், மணிமார்பன், கும்பாண்டன், வக்கிர தமிட்டிரன், மகாதமிட்டிரன் முதலியவரை அழைக்கக் கட்டளையிட்டான். அவர்கள் சூரன் அவைக்களம் சார்ந்தனர்.

சூரன் அவர்களை நோக்கி, "நேற்றுவரை எனக்கு ஏவல் புரிந்து வந்த இந்திரன் மனைவியுடன் மறைந்தான். அவனை மனைவியுடன் என்பால் சேர்ப்பீராக!' என ஆணையிட்டான். அவர்கள் அவ்வாறே எல்லா இடங்களிலும் தேவர்களைத் தேடத் தொடங்கினர்.

இந்த நிகழ்ச்சியை ஒற்றர் மூலம் அறிந்த இந்திரன் சசி என்ற தன் மனைவியுடன் தேவர்கள் உடன் வரச் சோழ நாட்டுச் சீர்காழியை அடைந்தனன். அங்கு நந்தவனம் ஏற்படுத்தி மலர் கொய்து இறை வழிபாடு செய்து வரலானான். இந்திரன் மூங்கில் உருவில் பன்னாள் மறைந்திருந்தான்.

இந்திரன் முன் நாரதர் தோன்றி, "நீவிர் கவலை ஒழிக. நான் பல தலங்களைத் தரிசித்த பொழுது அங்கோல வனம் என்ற காட்டைக் கண்டேன். அங்கு வீற்றிருக்கும் வடிவுடையம்மையையும், வளரொளிநாதரையும் வழிபடின் நும்துயர் தீர்தல் திண்ணம்" எனக் கூறி அகன்றார். இதனை இந்திரன் வியாழ பகவானிடம் கூறினான். அவருடைய ஆலோசனையின்படி இந்திரன் தேவர்களுடன் பல தலங்களுக்குச் சென்று வழிபட்டுவிட்டுப் பிறகு அழிஞ்சில் வனம் அடைந்தனன். அவர்கள் கோயிலின் கோபுரத்தைக் கண்டு தரிசனம் செய்து வளரொளிநாதரைக் கீழ்க் கண்டவாறு தொழுதனர்:-

மண்ணில் எளியேம் பொருட்டு இரங்கிவந்து முளைத்த வளரொளியே!
கண்ணில் கருத்தில் தனிவாக்கில் காணற்கு அரிய கருப்பொருளே!
விண்ணில் மிளிரும் வெண்மதியை வேணி வேய்ந்து மெலிவொழித்தாய்
எண்ணில் உயிருக்குள் உயிராம் இறையே! யாம்உன் அடைக்கலமே. (1)

நாலு மறையின் முடியானே! நவிலின் என்றும் முடியானே!
ஏலும் இடபக் கொடியானே! எண்ணாக் கலர்க்குக் கொடியானே!
மாலும் அறியா அடியானே! வழுதி அடித்த அடியானே!
சாலும் சாலும் மையாப்புத் தமியேம் இனிஉன் அடைக்கலமே. (2)

மாலால் கமல மலர்ப் பொகுட்டு வாழும் அயனால் வேதமுதல்
நூலால் நோன்மை முனிவ்ரால் நோக்கலாகா நுண்சுடரே!
ஆலாகலத்தை உலகுஉய்ய அமுதுசெய்த ஆரமுதே!
சேலார் கண்ணி இடப்பாகா! சிறியேம் நின்றன் அடைக்கலமே. (3)

தேவர்களின் முறையீட்டைக் கேட்டதும் இறைவன் அருளால் ஆகாசவாணி, ''சிவத் துரோகத்துக்குக் கழுவாயில்லை. சிவ நிந்தனை புரிந்த தக்கன் வேள்விக்குச் சார்பாயிருந்த குற்றம் இந்நாள்வரை உம்மைத் துன்புறுத்திற்று. இன்று எம்மிடம் அடைக்கலம் புகுந்தீர். முன்பு அரியும், அயனும் இச்சோதி லிங்கத்தைக் கண்டு அகந்தை நீங்கிப் பணிந்தனர். இனி உமக்கு அசுரரால் இடுக்கண் விளையாது'' என்று கூறியது.

பின் இந்திரன், தேவதச்சனை நோக்கி ''விரைவில் வளரொளிநாதருக்கு அழகிய கோயில் எழுப்புதி'' என்றான். அங்ஙனமே மயனும் கோயில் எழுப்பினான். இந்திரனும் நாளும் பூசை புரிந்து மனக்கவலை நீங்கினான்.

## 5. வயிரவக்கோலம் கொள்ளல்

அசுரர்கள் தேவரை எவ்வுலகத்தும் காணாது மண்ணுலகம் வந்தனர். கங்கை, காளிந்தி, கௌதமை, நர்மதை, துங்கபத்திரை நதிகள் பாயும் நாடுகள் எல்லாம் தேடி இறுதியில் காவிரிக்கரை வந்தனர்.

இவர்கள் அழிதற்கு எண்ணிய நாரதர், "தேவர்கள் அங்கோல வனத்தில் உள்ளனர்" என்றார்.

அசுரர்கள் படைகளுடன் திரண்டு அங்கோல வனத்தில் புகுந்தனர். இதைக் கண்ட தேவர்கள் நடுங்கி, அங்குள்ள வளரொளிநாதர் ஆலயத்துள் புக்கனர். அவர்கள் பின்வருமாறு இறைவனைத் துதிக்கலாயினர்:-

அடல்உறு குரண்டத்து உருக்கொளும் அவுணர்க்கு அரசினை அழித்து அவன் இறகைப்
படர்சடை அணிந்த பரமநாயகனே! பார்ப்பதி தேவி ஓர் பாகா!
புடவியே முதலாப் பொலியும் எண்மூர்த்தி! புண்ணியமால் விடைப்பாகா!
கடல்வரு களத்தைக் களத்து அமைத்து எம்மைக் கடைக் கணித்தது கண்கூடு அன்றே. (1)

வரம்பெறும் அவுணர்; வாழ்புரம் மூன்றும் மதன்புரம் ஒன்றும் நீறு ஆக்கி
அரந்தையுற்று ஆவி சலந்தரன் நீப்ப அரியமா ஆழியை விடுத்துச்
சிரந்து கைப்புண்டு தசமுகன் அலறச் சேவடி விரலினால் செய்த
கரந்தை அம்சடையாய்! நீ முனிவு எல்லாம் கடையரேம் உய்வதற்கு அன்றோ! (2)

முக்கணன் என்று ஓர்பெயர் உனக்கு உரைப்ப மூதக்கார் தூல
லக்கணத்தால்
அக்கரமாகி அணுவினுக்கு அணுவாய் அகண்டமாம் மகத்திற்கு
மகத்தாய்ச்
சக்கரம் தரித்த செக்கரத்தவனும் தண்மலர்த் தாதையும் காணா
மிக்கதோர் உருவோய்க்கு எங்கும் கண்உள; எம்விழுமம் நீ காணுறாது
எவனோ? (3)

ஓசையாய் எழுத்தாய் ஒண்பதம் ஆகி உறுபொருளாய் உயிர்க்குயிராய்த்
தேசமாய்த் திசையாய்க் காலமாய் ஐந்தாய்த் திகழ்ந்துள பூதமாய்ச் செறிந்த
ஈசனே! எந்தாய்! இடைவிடாது உன்னை இறுகுறப் பிடித்து
இனிதிருக்கும்
நேசருக்கு இடுக்கண் நேர்வதும் உண்டோ? நீஅலால் துணைஎமக்கு
யாரே? (4)

அன்பருக்கு அன்பன் அற்றவர்க்கு அனையான் ஆகுமால் சிவபிரான்
என்ன
வன்புறை கொண்டு நிகில வேதாந்தம் வழுத்து மந்தணப்பொருள்
உணர்ந்து
துன்பு அறுபாக்குத் துணைநின பாதத்துணை என அபயம் புக்கேமை
முன்ப! நீஇன்னும் இரங்கலை இருத்தி முறைகொலோ?
முறைகொலோ? முறையோ? (5)

பசிக்கழுத மகவின் ஓசை, தாயின் செவிக்குள் நுழைந்தது போலத் தேவர்களின் ஓலம், சிவனார் செவிகளில் நுழைந்தது.

அக்கணமே அசுரர் நெஞ்சம் திடுக்கிடவும் சூரியன் வெடிபடவும், அண்டகோளமும், மேருமலையும் நடுங்கவும், புவி தாங்கும் சேடன் ஆயிரம் தலைகளும் நிலைகுலையவும், கடல் நீர் சுவறவும், காலன் கலங்கவும், 'இன்னும் மிஞ்சிய தலைகளும் பறிபோமோ' எனப் பிரமன் கலங்கவும், அசுரர்கள் அழிவதற்கும், பக்தர்கள் காப்பாற்றப் படுவதற்கும் பரவசம் ஊட்டும் வயிரவக் கோலம் தாங்கிப் பரமன் தோன்றினான்.

திருவடிச் சிலம்புகள் கலீர் கலீர் என ஒலிக்கவும் திசைகள் செவிடுபடவும், அரவாம் அரைஞாண் தலைமணி கதிரொளியைக் குருடாக்கவும், மார்பில் துவளும் வெண்டலை மாலை முறுவல் புரியவும், மூன்றுகடல்களும் ஒரு சேர எழுந்து உதிரமாய்ப்

பாயினும் பாதியும் நிரம்பாத கபாலமும், சூலமும், உடுக்கையும், பாசமும் பேரொளி வீசவும், கையிற் சுவாலையுடன் தீ எரியவும், வக்ர தந்தம் மின்னவும், கோபமே பொங்கி வழிகிறதோ என்னும்படி முறுவல் தோன்றவும் மூன்று விழிகளினின்றும் தீப்பொறி பரக்கவும், வடவைத்தீப்போல் சடை கொழுந்து விட்டெரியவும் அண்டகோளத்தைத் தொடும் நான்கு புயங்களும் எட்டுத்திக்குகளையும் அளவு காட்டவும், ஆயிரம் கோடி சூரியன் ஒருசேர உதித்தாற்போன்ற ஒளி மிகுந்த திருமேனியுடன் வளரொளி ஈசன் தேவரிடம் கொண்ட கருணையால் மார்த்தாண்ட வயிரவக் கோலம் பூண்டான்.

வயிரவப் பெருமான் அருளினால் பூதகணங்கள் பலர் உதித்தனர். குருபகவானும், இந்திரனும், தேவர்களும் வடுக மூர்த்தியிடம் அபயம் வேண்டினர்.

வைரவநாதர், "உங்களுக்குத் துன்பம் வர ஒட்டோம். அசுரர்களை அழிப்போம். நீங்கள் அஞ்ச வேண்டாம்" என்று அருளினார். இது கேட்ட தேவர்கள் பெருமான் திருவடி அருகே பணிந்து நின்றனர்.

வடுகமூர்த்தி தம்படைக்கு நந்தியெம்பெருமான் தலைமை தாங்க வேண்டுமென்று எண்ணினார். உடனே அங்கு தோன்றிய நந்திதேவர் "உளக்குறிப்பு யாது என்பதை அருள்க", என்றார். வடுகமூர்த்தி, "இந்திரனை இழிவுபடுத்திய அசுரர் சேனையை இமைப் பொழுதில் அழித்தல் வேண்டும். நீர் படைத் தலைவராய் அசுரர்களை அழித்து மீளுக" என்றார்.

இதுகேட்ட நந்திதேவர் "அடியேன் படைத் தலைவனாய்ச் சென்றாலும் போரிடும் காலத்து ஒரு முதல்வன் வேண்டும். விநாயகப் பெருமானே இடையூற்றை முற்றும் அழிப்பவர். எனவே அவ் விநாயகப் பெருமான் பின்னே சென்று அசுரர்களை அழித்து தேவர் பதவியை நிறுவி ஈண்டு வர அருளுக" என்று வேண்டினார்.

உடன் வயிரவமூர்த்தி நினைத்த அளவில் கற்பகவிநாயகப் பெருமான் விரைவில் அங்கு வர, அவரை நோக்கி "தீயராம் அசுரர்களை அழித்து வருக", என்றார். விநாயகப் பெருமானும் "ஓம்" எனக் கூறி உடன்பட்டார். வயிரவமூர்த்தி அனைவருக்கும் விடை அளித்தார்.

# 6. அசுரரை அழித்தல்

படைதிரள, வளரொளிநாதர் கோயில் முன்பு வந்து தங்கிய கற்பக விநாயகர் நந்திதேவரிடம் கூறினார் :-

'கடலைப்போன்ற நம் படைக்கு நீர் தலைமை தாங்கிப் போர்க்களம் குறுகுக. பின்னர் யாம் வருவோம்'' என்றார். நந்திதேவர் விநாயகர் ஆணை தாங்கித் தேரேறி நால்வகைப் படைகளுடன் புறப்பட்டார்.

விநாயகப்பெருமானும் பூதகணங்களை விளித்து, "நம் படை போருக்கு எழுக'' என ஆணையிட்டுத் தேர் ஏறினார். பேரிகைகள் முழங்கின. தேவர் குழாமும் உடன் சென்றது.

விநாயகர் படைகள் நந்திதேவர் படைகளுடன் கலக்கப் பேராரவாரம் எழும்பிற்று. விநாயகர் போருக்கு வருதலை அறிந்த கும்பாண்டகன் என்னும் அசுரர் தலைவனின் படைகள் பூதவீரருடன் எதிர்த்துப் போரிட்டனர். பூதகணங்கள் செயலிழந்தன. உடன் விநாயகரின் தொண்டன் பிரளயன் பூதகணங்களை உற்சாகப்படுத்திப் போர் செய்தான். தேவகண்டன் என்ற அசுரர் தலைவன் பிரளயனுடன் போரிட முன்வந்தான். அவன் தேவர்கள் வருந்த அடிமுதல் முடிவரை ஆயிரம் அம்புகள் பொழிந்தான். அத்துணை அம்புகளையும் பிரளயன் அக்கணத்தே மாற்றி அசுரன் சிரத்திலும், நெஞ்சிலும் ஊன்ற ஏவவும் தேவகண்டன் பிரளயன் மார்பில் மூன்று அம்புகள் பொழிந்தான். பிரளயன் தேவகண்டன் வில்லை ஓரம்பினால் அறுத்தான். தேவர்கள் மகிழ்ந்தனர். தேவகண்டன் வேறு வில் எடுத்தான். அவன் சினத்துடன் ஓர் அம்பினை விட பிரளயன் தேரிழந்து பூமியிற் சாய்ந்தான். பின் அவன் எழுந்து ஒரு தண்டு கொண்டு தாக்க தேவகண்டன் முன்னே பாய்ந்து நாந்தக வாளால் அத்தண்டைப் பிளந்தான். அப்பொழுது ஆலகாலன் என்ற படைத்

தலைவன் எதிரில் வந்து நின்றான். தேவகண்டன் இரண்டு அம்புகளால் ஆலகாலனின் தேரைச் சிதைத்து வில்லை ஒடித்தான். பெருஞ்சினமுற்ற ஆலகாலன் புதிய தேரும் வில்லும் பெற்று அம்புமழை பொழிந்தான். உடன் தேவகண்டன் அம்புகளால் பூதகணங்களைத் தாக்கினான். உடன் பூதகணங்கள் அசுரர்களைத் தாக்கிக் கடலுள் ஓடச் செய்தனர்.

இவ்வாறு வெற்றி காணும் பூதவெள்ளத்தைக் கண்ட தேவகண்டன் ஆலகாலனின் படைகளை அழித்தான். இது கண்ட நந்திதேவர் உடனே தேரில் ஏறினார். வில்நாணைத் தெறித்தார். அம்புகளைப் பொழிந்தார். நந்திதேவர் அம்பினின்றும் எழுந்த தீ அவுணர் படைகளை அழித்து, தேவகண்டன் தேரையும், குதிரையையும், பாகனையும் அழித்து அவன் வில்லை இரு கூறாக்கியது. தேவகண்டன் தனித்து நின்றான்.

இது கண்ட நந்திதேவர், "அசுரர்க்கு அழியும் நாள் வந்தது அறிகிலை. தனித்து நிற்கும் உன்னை அழித்தல் வெற்றி அன்று. இன்று போய் நாளை வந்து போர் செய்க" என்று கருணையுடன் கூறினார். கொடியவன் இதுகேட்டுக் கொதித்து மலையைப் பறித்து வீசிப் பூதவீரர் பலரைப் பொடியாக்கினான். இது கண்ட நந்திதேவர் ஓர் அம்பை விடுத்து, தேவகண்டன் தலைகள் நான்கினையும் அறுத்துக் கடலில் தள்ளினார். எஞ்சிய சில அசுரர்கள் இச்செய்தியைக் கும்பாண்டகனிடம் கூறி அழுதனர்.

கும்பாண்டகன் நாற்படைகளுடன் வந்து, பூதகணங்கள் புடைசூழ, தேவர்கள் ஏவல் புரிய, நந்திதேவர் அருகே பணிந்து நிற்க, விநாயகப் பெருமான் கொலு வீற்றிருப்பதைக் கண்டான்.

கும்பாண்டகன் தண்டு ஒன்றை வீசினான். நந்திதேவர் ஓர் அம்பினால் அதை இரு துண்டாக்கினார். ஊழிக்கனல் ஒத்த அம்பொன்றைச் செலுத்தி அசுரர் படைகளை அழித்தார். கும்பாண்டகன் சக்கரப்படையை விடுத்தான். அது நந்திதேவர் விட்ட அம்பை விழுங்கிற்று. அமரரும், பூதரும் ஓலமிட்டு விநாயகப் பெருமானிடம் சென்றார்கள். உடன் விநாயகப் பெருமான் அகோர அஸ்திரத்தை விடுத்தார். அது சக்கரப்படையை விழுங்கிற்று. இது கண்ட கும்பாண்டகன் பெருஞ்சினத்துடன் அம்பு மழை விடாது பொழிந்து பூத வீரரைச் சிதைத்தான். தேவர்களும் ஒளிந்தனர். இது கண்ட விநாயகப் பெருமான்

பிரம்மாஸ்திரத்தை ஏவினார். அது கும்பாண்டகனது தேர், குதிரை, பாகன், எல்லாவற்றையும் அழித்து வில்லை ஒடித்துத் திரும்பிற்று. கும்பாண்டகன் தனித்து நின்றான். அப்போது விநாயகர் "வலிமை, இளமை, செல்வம், அதிகாரம் முதலிய வாழ்வெலாம் நீரில் குமிழி போன்றன. உன்குலத்தோர் அறனிலா நெறியிற் சென்றனர். எல்லாப் படைகளையும் இழந்த உன்னைக் கொல்லல் மரபன்று. செல்க," என்றார்.

இது கேட்ட கும்பாண்டகன், "முன்னம் எம்மரபில் பிறந்த சிந்துரனைக் கொன்றாய். நீ சிவனுக்கு மூத்த பிள்ளை என்று கருதி எம்மனோர் உன்னை ஒன்றும் செய்திலர்", என்றான். அவன் புதிய தேர் ஒன்றில் ஏறிக் கோடிக்கணக்கான அம்புகளைப் பொழிந்தான். பூதப்படைகள் நடுங்கின. விநாயகர் தம்முடைய அங்குசப் படையை நோக்கி, "இக்கணமே பகைச் சேனையைத் தரைப்படுத்தி கும்பாண்டகன் தலையைத் துணித்துக் கடல் நீரில் மூழ்கி விரைவில் திரும்புக" என்றார். அது கும்பாண்டகன் உடலைச் சித்திரவதை புரிந்து அண்டவெளியில் வீசிப் பகைவர்களை அழித்துக் கடலில் மூழ்கித் திரும்பிற்று. வானவர் பூமாரி பொழிந்தனர்.

இப்போரில் பிழைத்த சில அசுரர்கள் வக்கிர தமிட்டிரன், மகா தமிட்டிரன் என்ற இரு அரக்கர் தலைவர்களிடம் சென்று முறையிட்டனர். வக்கிரதமிட்டிரன், "இக்கணமே ஆனைமுகக் கடவுளை அழிக்கின்றேன்" என்று சூளுரைத்துத் தேர் ஏறினான். கோடித்தேர்கள், இரண்டு கோடி யானைகள், நான்கு கோடி குதிரைகள், எட்டுக்கோடி அசுரவீரர்கள் சூழப்போருக்கு எழுந்தான். மகாதமிட்டிரனும் ஆயிரம் குதிரைகள் பூட்டிய தேரில் ஏறி நால்வகைப் படைகள் சூழப் போருக்குக் கிளம்பினான். வக்கிரதமிட்டிரன் பூதப்படைகளை நோக்கிப் பெருமலை ஒன்றினை எடுத்து எறிந்தான். மலை தாக்கவந்த அளவில் பூதவீரர் விநாயகரை அணுகி "எம்மை இக்கணமே காப்பீராக" என வேண்டினர்.

உடனே விநாயகர் எதிர்வந்த மலைமீது குலிசப் படையை ஏவினார். "இம்மலை இனி இங்கு எனக்குக் கோயில் ஆகுக", என்றார். குலிசம் மலையைக் குடைந்து குகையாக்கி விநாயகர் கையில் வந்து தங்கிற்று. அங்கே விநாயகர் அமர்ந்தார். தேவர்கள் "தேவரீர் பகைவரை அழித்த பின் இங்கு நிலைத்திருந்தருள்க," என வேண்டினர்.

வக்கிரதமிட்டிரன் படைகளுக்கும், பூதப்படைகளுக்கும் பெரும்போர் நிகழ்ந்தது. பூதப்படைகள் நலிவது கண்ட தேவர் விநாயகர் முன் வந்து அசுரரின் இறுமாப்பை ஒழிக்க வேண்டினர். உடனே விநாயகர் மலை போன்ற பெருந்தேர் ஏறி வில்லேந்திப் போர்க்களம் புக்கார். வக்கிரதமிட்டிரன் விநாயகரை நோக்கி வேலொன்றை வீசினான். கற்பக விநாயகர் தன் கரத்திலுள்ள அங்குசத்தை நோக்கி, "இக்கணமே சென்று இவன் ஆவி குடித்து ஏனை அசுரரையும் அழித்து மீள்க," என்றார்.

பாதகன் விட்ட வேலைப் பொடியாக்கி உக்கிர வடிவத்தில் வரும் அங்குசத்தைக் கண்ட வக்கிரதமிட்டிரன் தண்டு ஏந்தித் தேரினின்றும் இறங்கித் தரைக்கு வந்தான். அங்குசம் அவன் தண்டை நூறுகூறாய் ஒடித்து வாள் ஏந்திய புயத்தை வெட்டிற்று. விநாயகரை நிந்தித்த வக்கிரதமிட்டிரனை விண்ணுக்கு அனுப்பியது. கடல் நீரில் மூழ்கி ஐங்கரன் கரத்தினை அடைந்தது. இதை மகாதமிட்டிரனிடம் அசுரர்கள் கூறினர்.

உடனே அவன் வெகுண்டு போருக்கெழுந்தான். அப்பொழுது விநாயகர் தேவர்களைப் பார்த்துக் கூறுவார்: "பகைவர் படைகளில் பாதியை அழித்தோம். அனைத்தையும் அழித்து விட்டோம் எனில் வயிரவக் கடவுளின் கீர்த்தியைக் குறைத்தவர் ஆவோம். நாம் இம்மலையில் அமைந்த ஆலயத்தில் உவகையுடன் உறைகின்றோம். நீவிர் வயிரவநாதரிடம் விரைந்து சென்று முறையிட்டு வெற்றியை அடைவீராக," எனக் கூறி அக்கோயிலில் தங்கினார். அன்று முதல் அந்த இடம் 'பிள்ளையார்பட்டி' எனப் பெயர் பெற்றது.

மகாதமிட்டிரனின் படைகள் வருவதைக் கண்ட நந்திதேவர் பூதகணங்களை நோக்கி, "ஒன்றும் அஞ்சற்க. வயிரவநாதரின் முத்தலைவேல் பகைவரை அழிக்கும். நீவிர் எழுக," என்றதும் பூதவீரர்கள் உற்சாகத்துடன் எழுந்தனர். போரில் மகாதமிட்டிரனுடைய மகுடம் சிதைய, அவன் மணி, மல்லர் என்ற அசுரர் தலைவர்களையும் உடன் கொண்டு மீண்டும் போருக்கு எழுந்தான். போரில் பூதப்படைகள் அழிந்தன. தேவர்கள் உடனே வைரவமூர்த்தியிடம் சென்று முறையிட்டனர். உடனே வயிரவநாதர் தம் திருக்கரத்திலுள்ள முத்தலைச் சூலத்தை நோக்கி "இப்பாதகர் மூவர் உடலங்களை நுனியிற் கோத்து ஈண்டு வருக," என

ஆணையிட்டார். உடன் அச்சூலமும் மகாதமிட்டிரன், மணி, மல்லன் என்ற மூன்று அசுரர் உடலங்களையும் நுனியால் குத்திக் கோத்து வடுகநாதன் திருமுன் அடைந்தது.

வடுகநாதன், ''இவற்றைத் தெற்கில் இடுக,'' என்று ஆணையிடச் சூலம் அவ்வாறே செய்தது. அவை மலைகளாயின பின் சூலப்படை நீரில் மூழ்கி நம்பிரான் திருக்கரத்தை அணைந்தது.

போரில் மாண்ட பூதகணங்களை மறை வாக்கால் வைரவமூர்த்தி எழச் செய்தார். வானவர் பூமழை பெய்தனர். போர்க்களத்தில் அசுரர்கள் ஒரு சேர மாண்டனர். நந்தி தேவர் பூதகணங்களுடன் போர்க்களம் நீங்கிப் பிள்ளையார்பட்டியில் கற்பகவிநாயகரைப் பணிந்து விடைபெற்றார். வைரவநாதரையும் போற்றி வணங்கினார். தேவர்கள் பேரானந்தக் கடலுள் திளைத்து வயிரவநாதரைப் பின் வருமாறு துதிக்கலாயினர் :

மாறுஇயல் வினைபுரிந்து வைகலும் எம்மனோரைச்
சீறிய கொடிய தீய சிதடராம் அவுணர் யாரும்
நூறிய முழக்கி ஏற்ற நோன் பெருங்களத்து ஒருங்கு
பாறிய முனிந்தாய் போன்ற பரம காருணிய! போற்றி! (1)

நாயினும் இழிந்தேம் ஆகி நண்ணிய எமக்கு இரங்கித்
தீயினும் ஆலகாலத் திரளினும் வெய்ய தெவ்வை
வாயினும் குருதி கக்க வல்விரைந்து அடர்த்துப் பெற்ற
தாயினும் இனிமை மிக்க தயாநிதி எந்தாய்! போற்றி (2)

நல்துளி மழைமுகிற்கு நால்நிலம் பிரதியாற்றில்
சிற்றறிவுடையேம் நிற்குச் செய்வதோர் கைம்மாறு உண்டால்
குற்றமும் குணமாக்கொண்டு கோதுஆட்டி அன்பர்க் காக்கும்
கொற்றவ! வடுக நாத! குருஉச் சடைக் குமர! போற்றி! (3)

இங்ஙனம் துதித்த தேவர்களை நோக்கி வைரவநாதர், ''பரமன் நெற்றிக்கண்ணிலிருந்து பன்னிரு தோளும், ஆறுமுகங்களும் தாங்கிச் சின்னாளில் குமரவேள் உதிப்பான். அவன் சூரனை வதைப்பான். அதுவரை தன்பால் சேர்ந்த அனைவர்க்கும் சிரமம் தீர்க்கும் காரணத்தால் இளைப்பாறுகுடி (இளையாற்றங்குடி) எனப்பெயர் பூண்ட புராதன வனத்தில் தங்கி இருப்பீராக'' என்று அருளினார்.

தேவர்கள் வயிரவநாதரை நோக்கிக் கூறினர்:-

"தங்கள் திருவுளப்படி நடக்கின்றோம். தாங்கள் கையில் சூலம் தாங்கி இங்கு வீற்றிருப்பதால் இத்தலம், 'வயிரவன் கோயில்' எனப் பெயர் பெறுக". இதிலிருந்து இவ்வூர் வைரவன் கோயில் என வழங்கலாயிற்று. பிற்காலத்தில் நகரத்தார் இக்கோவிலைத் திருப்பணி செய்து சிறப்பித்தமையால் இவ்வூர், 'நகர வயிரவன்பட்டி' என்ற பெயரைப் பெற்றது. மேலும் தேவர்கள். "வருங்காலத்தில் உன் சன்னிதி அடைந்தோர் பலவகை நிதிகள், பூரண ஆயுள், நன்மக்கள், எட்டுவகைப் பாக்கியங்கள், கல்வி இவை எல்லாம் பெறவேண்டும்" என்றனர்.

பல்நிதி பூரணாயுள் பகைவரின் பிணியின் தீர்தல்
நல்நிதி அனைய மக்கள் நாலிருபோகம் கல்வி
இன்னிதிற் கொள்ளப்பட்ட இன்னமும் முழுதொருங்குன்
சன்னிதி அடைந்தார் பெற்றுத் தழைத்தனர் வாழ்தல் வேண்டும்.

உடன் வயிரவநாதர், 'அங்ஙனமே ஆகுக' என்று அருளி விடையளித்தார். பிறகு தேவர்கள் பிள்ளையார்பட்டி சென்று கற்பக விநாயகரைப் பூசித்து வழிபட்டுத் துதிக்கலாயினர்:-

'வன்னமும் பதமும் மூலமந்திரம் தானும் ஆன
பின்னம்இல் குடிலையின்கண் பேரொளிப் பிழம்பாய்த் தோன்றும்
முன்னவ! முன்னத்தூடு முன்னினை முன்னுவார்கட்கு
என்ன காரியமும் முற்ற இன்அருள் புரிவாய்! போற்றி!'

இத் துதியைக் கேட்ட விநாயகப் பெருமான் "இத் துதி கனி, கன்னல், தேன் இவற்றினும் எனக்கு இனிதாம். இனி உங்களுக்கு இடையூறில்லை. என் இளவல், சூரனை அழித்து உங்களைக் காப்பான்," என்று விடை கொடுத்து அனுப்பினார். பின்னர் தேவர்கள் வயிரவன் கோயிலில் வந்து தங்கினர்.

# 7. தேவர் வழிபாடு

தேவர்கள் வடிவுடையம்மை வளரொளிநாதருக்குப் பூசைகள் ஆற்றக் கருதி வயிரவரின் கைச்சூலம் அகழ்ந்து தோண்டிக் கொப்புளித்த சிவதீர்த்தம் படிந்தனர். பின் நீறு பூசி ஐந்தெழுத்தோதி வணக்கம் புரிந்தனர். மும்முறை வலம் வந்தனர்.

பின் இறைவனுக்கு ஆடை, சாந்து, அணிகலம் அணிவித்துக் கற்பக மலர் சாத்தி அர்ச்சனை செய்து தூப தீபங் காட்டி வர்க்கான்ன நிவேதனம் செய்து கற்பூரம் காட்டிக் கண்ணில் ஆனந்த அருவிநீர் சொரியக் கைம்மலர் உச்சிமேற் குவித்துத் துதிக்கலாயினர் :-

'மண் அறல் அங்கி மாருதம் காயம் வாண்மதி இரவி ஆன்மா என்று
எண்ணிய எட்டும் எழில் திருமேனி எனக் கொண்டு முழுதுமாய் நின்றாய்
விண் உறுவேமை வெம்துயர் தீர்ப்பான் மேதினி மீது உளோர் யாரும்
கண்உற வடுக வடிவு எடுத்து அவுணர்க் கடிதுஅடு வளரொளி போற்றி! (1)

'கடம்பு அடி முளைத்துக் கவுரியர் உய்வான் கணிப்பு அரும் திருவிளையாடல்
திடம்பட இழைத்த திறம் எனச் சாலச் சிறியரேம் பொருட்டு உளம் இரங்கி
அடம்படு தனுசர் ஆர்உயிர் அகற்றி அலகுஇலா இன்பு எமக்கு ஆற்றி
மடம்படும் இதயத்து அகஇருள் குமைக்கும் வளரொளிநாதனே! போற்றி! (2)

'பண்டை மாமறையின் சென்னியும் நினது பரிசினை உள்ளவாறு உணரா;
கொண்டல் நேர் வானும் கோகனகத்துக் குரிசிலும் அன்னரே ஆம்; வாய்
விண்டு உனை வழுத்தல், மூங்கையர் சில்லோர் வியன் கலைக்கு உரை விரித்து அற்றால்;
மண்டிய நாக கங்கணச் செங்கை வளரொளிநாயக போற்றி. (3)

இவ்வாறு வளரொளிநாதரையும், வடிவுடையம்மையையும் போற்றித் திருவருள் பெற்றுப் பின் பிறைஎயிறும், கனற்சிகை வேணியும், கறைப்பலிக் கலமும், மூவிலைச் சூலமும் தாங்கி வீற்றிருக்கும் வயிரவமூர்த்தியை அடைந்து கீழ்க் கண்டவாறு துதித்தனர் :-

'வெண்தலைமாலை வாழி! விலையிலாப் பணிப்பூண் வாழி!
புண்தலைக் கழுமுள், பாசம், பொருதுடி, கபாலம் வாழி!
மண்டு அலை வாரிவாய்ப்பெய் மணிஅரிச்சிலம்பு வாழி!
கண்டு அலை மொழி மார்பன்தோல் கரிய கஞ்சுகமும் வாழி!' (1)

'வஞ்சகர் அஞ்சத்தக்க வாள்நகை வதனம் வாழி!
வெஞ்சமத்து அசுரர்ச் செற்ற வீர அட்டகாசம் வாழி!
புஞ்சவல் இருள்வெல் ஓதிப் பொறியினை அடக்கும் நல்லார்
நெஞ்சகம் கவராநின்ற நிருவாணக் கோலம் வாழி! (2)

'வாக்கிய விலாழி வாய்த்து மணியணி மிடற்றது இம்பர்
நோக்கிய கட்டு நீல நொறில் வயப்புரவி வாழி!
தூக்கிய துளிர் மென் தாலுச் சுருண்டவால் சுணங்கன் வாழி!
பாக்கிய வடுகநாத பைரவ! வாழி வாழி!' (3)

இங்ஙனம் துதித்த தேவர்களை நோக்கி வயிரவமூர்த்தி "இப்பாடல்களைக் கொண்டு துதிப்பவர் அனைவரும் நினைத்த பேறு எல்லாம் பெறுவர்" என்று வரமளித்தார்.

பின்னர் தேவர்கள் இளையாற்றங்குடித்தலம் சென்று, நித்யகல்யாணி உடனாய கைலாச நாதரை வழிபட்டுத் தங்கியிருந்தனர்.

சிலகாலம் கழித்துப் பின் முருகப்பெருமான், சூரனைச் சங்கரித்துத் தேவர்களின் குறைகளை நீக்கினார். சீர்காழிப் பதியினின்றும் வந்த சசியுடன் இந்திரன் திருப்பரங்குன்றம் சென்று மகள் தெய்வயானையை முருகனுக்குத் திருமணம் செய்வித்தான். முருகன் இந்திரனுக்கு மகுடம் சூட்டினான். இந்திரன் தேவலோகத்தில் தேவகுழாத்துடன் பேரானந்தத்தில் திளைத்திருந்தான்.

# 8. ததீசி முனிவர் வழிபாடு

நான்முகன் பெற்ற மக்கள் பதின்மரில் ஒருவன் தக்ஷன். அவன் தந்தையை நோக்கி "அனைத்துக்கும் காரணம் ஆன பராபரன் யார்?" என வினவினான். பிரமன் "என் தந்தை நாராயணனும் நானும், 'நானே பூரணப் பிரமம்' எனக் கூறிப் போரிட்டபொழுது அழற் பிழம்பாய் நின்ற அமலனே 'பிரம்மம்' என உணர்ந்தோம். அவனை நீ வழிபடுக" என்று கூறினார்.

அதுகேட்ட தக்கன் இமயத்து மானசத்தடக் கரையில் நெடுங்காலம் தவம் புரிந்தான். பரமன் உமையொரு பாகனாய் விடை மீதேறிக் காட்சி தந்து தக்கனிடம், "நீ வேண்டுவன கேள்" என்றார். அதற்கு தக்கன் "தேவர்கள் எல்லாம் என் ஆணைக்கு அடங்க வேண்டும். உமை எனக்கு மகளாகப் பிறந்து அவளை நீ மணத்தல் வேண்டும்," என்று வேண்டினான். "நீ விரும்புவன அளித்தோம்," என்று பரமன் கூறினார்.

தக்கன் புதிய நகரம் உண்டாக்கித் தேவர்கள் அனைவரும் தனக்கு ஏவல் புரிய அரசாண்டான். வேதவல்லியை திருமணம் புரிந்தான். வேதவல்லியின் வளர்ப்பு மகள் உமையவளை சிவன் மணந்து கைலை சென்ற பொழுது தக்கன் சிவனை நித்தித்தான். சிவனை அவமானப்படுத்தக் கருதிய தக்கன் பிரமனைக் கொண்டு ஒரு வேள்வி இயற்றினான். அதற்கு நந்திதேவர் சிவனின் பிரதிநிதியாக வந்தார். தக்கன் சிவனையும் நந்திதேவரையும் நிந்தனை செய்தான். உடனே நந்திதேவர், "அரனை வைத வாய் அழிக. அரன் இன்றி வேள்வி புரிபவர் சிரம் அறுக. நினக்கு அஞ்சி இவ்வேள்வியில் கலந்து கொண்ட தேவர்கள் சூரனால் இடர்பெறுக!" என்று சாபமிட்டுக் கைலை சென்றார்.

தக்கன் மீண்டும் பரமனை விட்டு வேள்வி ஒன்று செய்யத் தொடங்கினான். சிவனடியார் சிலர் நீங்கலாக முனிவர், அந்தணர் பலரும் குழுமினர். அவருள் ததீசி முனிவர் தக்கனிடம், "யாது

காரியம் புரிந்தாய்? ஐந்தொழில் புரியும் சம்புவைத் தவிர்த்தோ யாகம் நடத்துவது? அவனே யாகத்தின் பதி. அவனே யாகத்தை நுகர்வோன். அவனே ஆத்ம நாயகன். ஏனையோர் ஆன்ம வர்க்கமே. அரனுக்கே அவி அளித்திடுக'' என்று அறிவுறுத்தினார்.

'புன்தலையோடும், உடற்சாம்பரும், பன்றிஎயிறும் அணிபவனோ பரமன்? விடம் உமிழும் பாம்பை மேனியில் அணிந்தவனோ பரமன்? சுடலையில் பேயுடன் ஆடுபவனோ பரமன்?'' என்று பரமனைத் நக்கன் இகழ்ந்து பேசினான்.

ததீசி முனிவர் தன் இரு செவிகளையும் பொத்தித் தீயோன் தக்கன் கூறிய இழிசொல் எல்லாம் உயர்வையே புலப்படுத்தும் என்பதை உணர்த்தினார். தக்கன் அதற்கு ததீசி முனிவரைக் கடிந்துரைத்து அவரைச் 'செல்க' எனக் கட்டளையிட்டான்.

ததீசி முனிவர் தக்கனிடம் "நீ , செய்நன்றி கொன்றனை. சிவனைத் தவிர்த்துச் செய்யும் வேள்வி சிதைக'', என்று சாபமிட்டுச் சென்றார்.

வயிரவன் கோயிலில் சென்று வடிவுடையாள் சமேத வளரொளிநாதரைப் பூசித்து சிவநிந்தை கேட்ட பாவத்தைப் போக்க ததீசி முனிவர் எண்ணினார்.

தசீதி முனிவர் சிவதீர்த்தத்தில் நீராடி ஐந்தெழுத்து ஓதி ஆனைமுகனைப் பணிந்து ஆலயம் புகுந்து வளரொளிநாதரை வணங்கித் துதிக்கலாயினார் :-

'பந்தித்த பாசப் பகையே வளரொளியே!
சிந்திப்பவர்க்கு மிகத் தித்திக்கும் தெள்ளமுதே!
அந்திப் பிறையை அணிந்தாய் உனை அந்தோ,
நிந்திக்கக் கேட்ட நெடும்பாவம் தீர்த்தருளே. (1)

கைதவர்க்குத் தோன்றாக் கதித்த வளரொளியே!
மைதவழும் கோட்டு இமவான் மாது மணவாளா!
நைதல் அடியார்க்கு ஒழிக்கும் நாயகனே! நின்னை அச்சோ!
வைத உரை கேட்டொழிந்த வன்பாவம் தீர்த்தருளே! (2)

கொழித்த திரைக்கூலக் குரைகடல் வாய் நஞ்சைச்
செழித்து அமரர் உய்வான் திருவமுது செய்த
வழித்துணையே! மன்னும் வளரொளியே! உன்னைப்
பழித்தமொழி கேட்ட பூருஉப்பாவம் தீர்த்தருளே! (3)

அகர உயிர் போன்று உயிர்தோறு அண்மி இயக்கிச்
சகச பரஞானம் தகைந்த மலம் நீவி
மகவு என இன்பூட்டும் வளரொளியே! நின்னை
இகழ் வசனம் கேட்ட இரும் பாவம் தீர்த்தருளே (4)

அள்இலை வேல்சேயை அழைத்து மடிமீது இருத்தி
வள்ளிய செங் கஞ்சமலர் வாய் முத்தம் கொண்டு உவப்போய்!
உள்ளியன முற்றளிக்கும் ஓங்கு ஒளியே! எந்தைஉனை
எள்ளிய சொல்கேட்ட இருட்பாவம் தீர்த்தருளே!' (5)

இத்துதியைக் கேட்ட இறைவன் இடபாரூடராய்த் தோன்றி, "இப்பஞ்சகத்தைத் துதிப்பவர் அனைவர்க்கும் பாதகம் தீரும்" எனக்கூறி ம்றைந்தார். திருக்கோயிலில் வழிபாடாற்றித் ததீசி முனிவர் தன் ஆசிரமம் சென்றார்.

## 9. சந்திரன் வழிபாடு

வியாழனாகிய குரு பகவானுக்கு சந்திரன் கடும் துரோகம் செய்தமையான் அவனுடைய ஒளி மங்கலாயிற்று. அவன் தன் பாவம் தீர்க்க வழி யாது என்று பிரமனைக் கேட்டான்.

பிரமன் "தென்பாண்டி நாட்டில் வயிரவன் கோயில் சென்று வடிவுடையாளையும், வயிரவநாதரையும் பூசித்தால் பாவம் நீங்கும்" என்று கூறினான்.

சந்திரன் வடுகபுரம் அடைந்து வயிரவ தீர்த்தம் படிந்து சிவசின்னம் தரித்து ஐந்தெழுத் தோதி ஆலயம் புகுந்து பூசையாற்றித் தோத்திரம் செய்தான் :-

'புண்ணிய மால் வெள்ளேற்றின் மிசையேறும் போர் ஏறே
பூசித்தோர்கள்
எண்ணியன எப்பொருளும் எளிது எய்த இனிது அருளும் இயல்பின்
எந்தாய்!
தண்ணிய பாகீரதியைச் சீரதியை அக்குடில சடிலம் வைத்தாய்
பண்ணியலும் வளரொளியே! மாபாதகம் தொலைத்தி படிற னேற்கே?

இவ்வாறு பிரார்த்தித்த சந்திரன் முன்னர் வளரொளிநாதர் காட்சி தந்து அவனுடைய மாபாதகத்தால் ஏற்பட்ட பாபத்தினைத் தீர்த்தருளினார். சந்திரனும் "நின் பொன்னார் திருவடிகளில் என்றும் பக்தி நிலைத்திருக்க வேண்டும்" என்ற வரம் வேண்டிப் பெற்றான்.

## 10. இந்திரன் வழிபாடு

அரம்பையர் நடனம் கண்டு இந்திரன் தன்னை மறந்து மயங்கி இருந்தான். அவ்வேளையில் குரு பகவான் வரவும் இந்திரன் தன் ஆசனம் விட்டு எழாமலும், உபசரிக்காமலும் இறுமாந்திருந்தான். இது கண்ட வியாழ பகவான் அவ்விடம் விட்டு அகன்றார். இந்திரன் குருவைக் காணாமல் பிரமன்பால் சென்று முறையிட்டான். குருவை இகழ்ந்த பாவத்தை நுகரும் பொருட்டு பிரமன், "நீ, குருவைக் காணும் வரை துவட்டாவின் மகன் விசுவரூபனைக் குருவாகக் கொள்" என்று நேசம் உள்ளவன் போல் கூறினான். இந்திரனும் அவ்வாறே விசுவரூபனைக் கொண்டு வேள்வி ஒன்று செய்வித்தான்.

வாக்கும் மனமும் வேறாய் விசுவரூபன் வேள்வி செய்வதை அறிந்த இந்திரன் அவனைத் தன்னுடைய வச்சிரப்படையால் கொன்றான். உடனே பிரமஹத்தி தோஷம் இந்திரனைப் பற்றிற்று. இதை அறிந்த துவட்டா இந்திரனைக் கொல்ல ஒரு வேள்வி புரிந்தான். நெருப்புக் குண்டத்தினின்றும் விருத்திராசுரன் கிளம்பி இந்திரனைக் கொல்ல விடை பெற்றுச் சென்றான். இந்திரனுடன் கடும் போர் புரிந்தான். அவனை வெல்ல இயலாது இந்திரன் திருமாலிடம் சென்று முறையிட்டான். திருமால், "உன்னுடைய வச்சிரப் படை பழையது. தேவர்களும், அசுரர்களும் பாற்கடல் கடைந்த போது படைக்கலன் அனைத்தையும் ததீசி முனிவரிடம்

அளித்தனர். அவர் அவற்றை விழுங்கினார். அவை அவருடைய முதுகந்தண்டுடன் இணைந்தன. அம்முதுகந்தண்டு எலும்பே வச்சிரப்படை அமைக்க ஏற்றது. அவரிடம் வணங்கிக் கேட்டால் அவர் அருளுடன் அதைத் தருவார். புதுப்படை பெற்றுப் பகையை வெல்க'' என்று கூறினார்.

அவ்வாறே இந்திரன் ததீசி முனிவரிடம் சென்று வேண்டினான். 'அன்புடையார் என்பும் உரியர் பிறர்க்கு' என்னும் பொய்யா மொழிக்கு ஏற்ப முனிவர் யோகத்தில் ஆழ்ந்தார். ஆத்மஜோதி பெருவெளிச்சோதியில் கலந்தது. அவருடைய முதுகெலும்பை இந்திரன் வச்சிரப்படை ஆக்கி மகிழ்ந்தான். முனிவர் இறக்கக் காரணமான இந்திரனை மீண்டும் பிரமஹத்தி பிடித்தது.

இந்திரன், ''இவை அனைத்தும் திருமால் காரணத்தால் நிகழ்ந்தனவே. இனி அவர்பாற் செல்லேன்'' என்று உறுதி பூண்டு குருபகவானையே அல்லும் பல்லும் நினைத்து உருகித் தியானம் புரிந்தான். அவரும் கருணையுடன் அவன் முன்பு வர அவன் வீழ்ந்து வணங்கினான்.

குருபகவான் கூறலாயினார், ''வீரபாண்டியபுரத்தில் வயிரவன் கோயில் என்ற தலம் உண்டு. நீ அங்குச் சென்று வயிரவ தீர்த்தத்தில் மூழ்கி வளரொளிநாதரை அருச்சித்தால் உன் பழியும் பாவமும் தீரும்.''

அவ்வாறே இந்திரன் வயிரவன் கோயில் வந்து தீர்த்தத்தில் மூழ்கி ஐந்தெழுத்தோதிக் கோயிலுக்குள் புகுந்து அட்டாங்க வணக்கம் செய்து, இறைவன் திருமேனியை ஆகாய கங்கை நீரால் நீராட்டி, அணிகலன்கள் பூட்டி நிவேதனங்கள் செய்து, தூபதீபம் காட்டினான். தேவமலர்கள் கொண்டு அருச்சித்துக் கீழ்க்கண்டவாறு துதித்தான் :-

'வேத நாயக! ஆகமச் சென்னியில் விரித்த
போத நாயக! புற்கலர் நாயக! பொருப்பின்
மாதர் நாயக! வளரொளிநாயக! வலிசால்
பூத நாயக! புகல் புக்கேன் புறத்து எனைப் போக்கேல்' (1)

'கோடி ஆதவர் குழுமியாங்கு இலங்கு மெய்க்கோலம்
நீடி ஆனந்த நிருத்தம் செய்யாநின்ற நிமலா!
தேடி மால் அயன் தெரிகலா வளரொளிச் செம்மால்!
வாடினேன் உன்கழல் நிழல் மருவுமெனை வரையேல்.' (2)

'ஆதி மத்தியம் அந்தம் என்று இன்னவை அறியாய்
ஓதி இன்னமும் நான்மறை அளந்து அறியொண்ணாப்
பூதி மேனிய வளரொளி முழு முதற்பொருளே!
நீதி இன்மையேன் எனினும் நின் பற்றினேன் நீக்கேல்'. (3)

உடனே இறைவன் காட்சிதந்து, ''உன் உளத்தில் தோன்றுவது யாது?'' என்றார். அதற்கு இந்திரன் ''இங்கு நின்னை வழிபட எண்ணியபோதே, என் பழியும், பாவமும் அகன்றன. எப்பொழுதும் உன் திருவடி மலரில் என் அன்பு நீங்காதிருக்க அருள்க'' என்றான்.

வளரொளிநாதர், ''நின் பத்திமை நன்று. நீ விருத்திராசுரனைக் கொல்வாய். அதனால் பழிஉருவத்துடன் துன்புறுவாய். ஆலவாய் நகரம் அடைந்து மீனாட்சி சுந்தரேசனைப் பூசிக்க, பழியும் பாவமும் நீங்கும். நீ பெரும்பதம் அடைவாய்,'' என்று அருளி மறைந்தார்.






# 11. சுக்கிரன் வழிபாடு

மாவலிச் சக்கரவர்த்தி வேள்வி ஒன்றைச் செய்தான். அவன் செருக்கையும் வேள்வி புரிவதையும் தேவர்கள் திருமாலிடம் சென்று முறையிட்டனர். "இவன் தனது அல்லாததைத் தனது என்று அபிமானித்துச் செருக்குறுகின்றான். இவனிடத்துப் பெருங்கொடை என்ற மேலான குணம் இருப்பதால் பூமியை யாசித்துப் பெறுவோம்" என திருமால் எண்ணினார்.

திருமால் காசிப முனிவர்க்கும் அதிதிக்கும் வாமன வடிவில் மகனாய்த் தோன்றினார். பூணூலுடன் மறை பயிலும் நாவினராய் மாவலியை அடைந்தார். "யாது தவம் செய்தேன்?" என்றான் மாவலி. வாமனன் "மூன்றடி மண் தருக" என்றான். தீமதி வாய்ந்த சுக்கிராசாரியன் இடையே குறுக்கிட்டு "இது வஞ்சனைச் செயல். நின் உடல், பொருள், ஆவியைக் கவர திருமால் செய்யும் சூழ்ச்சி இது. நீ தருதல் ஒழிக!" எனத் தடுத்தான்.

மாவலி "நீ சொல்வது போல் யாசிக்க வந்தவன் மாயன் ஆயினும் அவன் கை தாழ்ந்து என் கை கொடுப்பது மேலன்றோ; நல்வழியாயினும் ஏற்பது தீது; அல்வழி ஆயினும் கொடுத்தல் நன்று" என்று கூறினான். மாவலி வாமனனை "மூன்றடி மண் அளந்து கொள்" என்று நீர் வார்த்தான். அப்போது செம்பின் துளை வாயை வண்டு உருவம் கொண்டு சென்று சுக்கிரன் மறைத்தான். நீர் வந்திலது. உடனே வாமனன் தருப்பை நுனியால் துளை வாயைக் குத்தினான். சுக்கிரனின் ஒரு கண் தொலைந்து அவன் அவ்விடம் விட்டு அகன்றான். பின் ஓரடியால் மண்ணும் ஓரடியால் விண்ணும் அளந்து மூன்றாம் அடியை மாவலியின் தலைமீது வைத்தான். பின் அஞ்சன வண்ணன் அகன்றான்.

சுக்கிரன் அலைந்து பல தலங்களைத் தரிசித்தும், கண்ணொளி பெற்றிலன். அவன் பிரமனிடம் சென்று "நான் செய்ய வேண்டுவதென்ன?" என்று வினவினான். அதற்குப் பிரமன், "நீ செய்த தவற்றால் குருடு ஆயினை. இது நீங்க நீ வயிரவ நகர் சென்று பூசனை புரிக. குருடு நீங்கும்" என்று கூறினான். அவ்வாறே சுக்கிரன் வயிரவன் கோயில் கோபுர வாயிலை அடைந்ததும் கண்ணொளி பெற்றான்.

சுக்கிரன் வளரொளிநாதர் அருகிற் சென்று ஆனந்தக் கண்ணீர் உகுத்தான். பிறகு பூசைகள் செய்து இறைவனைத் துதிக்கலாயினன். வளரொளிநாதர் சுக்கிரனுக்குக் காட்சி கொடுத்து, "உன் பழியும் பாவமும் நீங்கின. அஞ்சற்க!" எனக் கூறி மறைந்தார்.

## 12. கிரிகரன் வரலாறு

புகார் நகரில் பிறந்த கிரிகரன் என்ற தனவணிகன் சிவத்தலயாத்திரை செய்ய முனைந்து பல தலங்களைத் தரிசித்து வரும் வேளையில் வயிரவ நகரை வந்தடைந்தான். அங்கு சிவமடம் ஒன்றில் திருநீற்றுப் பேரொளியுடன் விளங்கும் சிதானந்த முனிவரைக் கண்டு வணங்கினான். முனிவர் அவனைப் பற்றி விசாரிக்க, கிரிகரன் கூறியதாவது:

"நான் பூம்புகார் தனவைசிய மரபில் வந்தவன். என் பெயர் கிரிகரன். முற்கால நிகழ்ச்சிகளை உணரும் சக்தி உடைய முனிவரே! எம் குலத்தவரின் முன்னைய இயல்பும், வருங்காலத்து அவர் அடையும் நிலையும் அருள் புரிந்து கூற வேண்டுகிறேன்."

முனிவர் கூறியதாவது "புகார் வணிகர்கள் சைவ நன்னெறி வழுவாமல் ஓம்பி சிவதியானத்துடன் ஐந்தெழுத்து ஓதித் திருநீறும் கண்டிகையும் திருமேனியில் தரிப்பவர். சிவபக்தியாலும், மிக்க செல்வத்தாலும், பெருங்கொடையாலும் குபேரனைப் போல் வாழ்ந்தவர்கள். பண்டை வினைவசத்தால் சிவபக்தி குறைய வறுமை வாய்ப்படுவர். புகார் நகரை விட்டுச் சிதம்பரம் சென்று நடராஜப் பெருமானைத் தரிசிப்பர். அங்கு அகோர சிவாசாரியார் என்ற மகான் அவர்களுக்குச் சிவதீட்சை செய்விப்பார். அதன் பிறகு தனவைசியர்கள் புகார் நகரம் சென்று வணிகத் துறையில் வளமிக்கோங்கிக் களிப்புடன் வாழ்வர்.

சிறிது காலத்திற்குப் பிறகு சோழ அரசன் தனவைசியர்களை இகழ்ந்து தகாதன புரிவான். அச்சந்தர்ப்பத்தில் பாண்டிய மன்னன் தன் நாட்டிற்கு நல்ல குடிமக்கள் வேண்டும் என்று அகோர சிவாசாரியாருக்கு ஈசான்ய சிவாசாரியார் மூலம் திருமுகம் விடுப்பான். அகோர சிவாசாரியாரின் ஆசியுடன் தனவைசியர்கள் பாண்டி நாடு செல்வர்.

பாண்டியன் தனவைசியர்களை ஒன்பது வகையினர் ஆக்கி ஒன்பது சிவாலயங்கள் நல்குவித்துச் சிறப்பிப்பான். அக்கோயில்கள் அமைந்த ஊர்கள் : இளையாற்றங்குடி, மாற்றூர், வடுகநாதபுரம், இலுப்பைக்குடி, நேமம், சூரக்குடி, வேலன்குடி, பிள்ளையார்பட்டி, இரணியூர்.

அதன்பிறகு தனவைசியர்கள் ஆலவாயண்ணலையும் அங்கயற்கண்ணியையும் வழிபட்டு நன்மைகளை அடைவர். பிறகு செல்வச் செழிப்பு மிக்கவர்களாகிப் பல சிவாலயத்திருப்பணிகள் புரிந்தும், வேதாகம பாடசாலைகள் நிறுவியும் புகழ் பெறுவர்.

உனது மரபில் வரவிருக்கும் தெய்வநாயகன் வளரொளிநாதருக்குப் பல திருப்பணிகள் புரிவான்".

மேற்கண்ட தீர்க்க தரிசனச் செய்திகளைக் கேட்ட கிரிகரன் சைவசித்தாந்த உண்மைகளை உபதேசித்து அருளுமாறு சிதானந்த முனிவரைக் கேட்டுக் கொண்டான். அவரும் அவ்வாறே அவனுக்கு ஞானோபதேசம் புரிந்து வளரொளிநாதரையும், வடிவுடையம்மையையும், வயிரவநாதரையும் முறைப்படி வணங்கி நேமம் நகரில் வசிக்குமாறு கூறினார். கிரிகரனும் அவ்வாறே வழிபாடு செய்து நேமம் நகரில் இன்புற வாழ்ந்தான்.

'வாழி வயிரவன் கோயில் வளர் புகழ்
வாழி வண்மை வணிகர் பெருங்குலம்
வாழி மாது உமை மன்னன் அடியவர்
வாழி வைதிக சைவ மரபெலாம்.'

நிறைவு

திருச்சிற்றம்பலம்.

---